Regd. No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212. 4 பக்கம் விலை 45 காசு



**புதுமை**

பழமைப் பிடிப் புள்ளவர்கள் காலத் திற்குத் தேவையான மாற்றத்தைபுதுமையை வரவேற்கும் மனவலி மையைப் பெறவேண் டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**புகழ்**

சமுதாயத்துக்கு உண் மையாய்த் தந்திரபுத்தி இல்லாமல் பாடுபடுகிற வன் தான் உண்மை யான இயற்கைப் புகழ் அடைகிறான்.

-தந்தை பெரியார்



மலர்: 6 சென்னை 9 - 9 - 82 வியாழன் வெளியூர் 10 - 9 - 82 வெள்ளி இதழ்: 320

# துலாபார விழா அல்ல!

பேரன்புடையீர்,

செப்டம்பர் 15-ந்தேதியன்று காலை ஆங்காங்கே உள்ள கழக நண்பர்கள், ஒற்றுமையாக ஓரிடத்தில் கூடி ஊர்வலமாகச் சென்று பேரறிஞர் அண்ணா அவர்கள் சிலைக்கு மாலையணிவித்து, இனிப்பு வழங்கி சிறப்போடு அறிஞர் அண்ணா பிறந்த நாளைக் கொண்டாட வேண்டுகிறேன்.

நம்மில் 'யார் பெரியவர்' என்ற எண்ணத்தை விட்டுவிட்டு நாம் அனைவரும் 'அறிஞர் அண்ணாவின் தொண்டர்கள்' என்ற நினைவோடு கூடி விழா எடுத்தால்தான் அவருக்கு நாம் உண்மையாகவே விழா எடுத்தவர்களாவோம்!

நண்பர்களே! மறந்து விடாதீர்கள். நம்கையில் உள்ள மாலை, எத்தனையோ செடிகளில் பல இடங்களில் பூத்த மலர்களைப் பறித்து வந்து, தொடுத்து உருவாக்கப்பட்டது! இதே போல் தான் எத்தனையோ தாய்மார்கள் வயிற்றில் உருவாகி, எங்கோ வளர்ந்த நம்மையெல்லாம் ஒன்று சேர்த்து கழகத்தை உருவாக்கினார் அண்ணா!

பூக்கடைக்காரன் பக்குவமாக மலர்களைக் கையால் எடுத்து நீரில் நனைத்த நாரைக்கொண்டு மாலையை உருவாக்குகிறான்!

**அதேபோல்தான் பாசமெனும் அன்பில் நம்மை நனைத்து, கொள்கையெனும் நாரில் நம்மை இணைத்தார் அண்ணா! அந்த மாலையிலிருந்த 'ரோஜாவைப் பிய்த்து எறிந்து தன்னை உயர்ந்ததாகக் காட்டிக்கொள்ள ஒருவர் நினைத்தார் அந்த மலரை மக்கள் தங்கள் கைகளில் ஏந்திக்கொண்டனர்.**

**மக்களால் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்ட மலர்தான் புரட்சித்தலைவர் அவர்கள்!**

**மக்களின் பேராதரவோடு புரட்சித்தலைவர் அவர்கள் அறிஞர் அண்ணா தொடுத்த மாலையிலிருந்து உதிர்ந்த மலர்களோடு புதிய மலர்களையும சேர்த்து அண்ணா கையாண்ட முறையையே கொண்டு உருவாக்கியதுதான் இன்றைய நம் கழகம்!**

எனவே இதனை பத்திரமாகப் பாதுகாத்தால் தான் நமக்கும் பெருமை... நாம் ஏற்றிருக்கும் கொள்கைகளுக்கும் பலம்!

யார் பெரியவர் என்பதற்கு பதில் யார் கழகத்திற்கு எந்த அளவிற்குப் பணியாற்றுகின்றாரோ




அவர் அந்த அளவிற்குப் பெரியவர்!

ஏணியில் ஏறிக் கொள்வதாலேயே ஒருவர் உயர்ந்து விட்டார் என்று நினைப்பது அறிவின்மையாகும்!

ஒருவரின் உண்மையான உயரம் அவர் வளர்ச்சியில் தான் இருக்கிறது!

மாற்றான் தோளில் ஏறிக்கொள்வதாலேயே எவனும் 'மகான்' ஆகிவிட முடியாது?

உழைப்பால் உயர வேண்டும்! கட்டிடத்திற்கு பலம் அதன் மீது பூசப்படும் வண்ணத்திலே இல்லை. கடைக்காலில் தான் உள்ளது!

**தொண்டர்களே நம் கழகத்தின்**

(3-ம் பக்கம் பார்க்க)

## காஷ்மீர் சிங்கம் சிறையிருந்த கோகினூர் மாளிகைக்கு

# ஷேக் பெயர்

## முதல்வர் புரட்சித்தலைவர் அறிவிப்பு

சென்னை, செப் 9- காஷ்மீர் சிங்கம் ஷேக் அப்துல்லா சிறை வைக்கப்பட்டிருந்த கொடைககானல் கோகினூர் மாளிகைக்கு 'சேக்அப்துலலா கோகினூர் மாளிகை' என்று பெயர் சூட்டப்படும என முதல்வா புரட்சித்தலைவர் அறிவித்தார்.



தமிழ்நாடு சட்டசபை இன்று கூடியவுடன் காஷ்மீர் சிங்கம் ஷேக் அப்துல்லா மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் தீர்மானத்தை அவை முன்னவர் டாக்டர் நாவலர் முன்மொழிந்தார்.

கருணாநிதி (தி.மு.க.), என். எஸ். வி. சித்தன் (இ. காங்), உமாநாத் (மார்க்சிஸ்ட்), அழகிரிசாமி (இந்திய கம்யூனிஸ்ட், குமரிஅனந்தன் (கா.கா.தே.கா.), நெடுமாறன் (காமராஜ் காங்கிரஸ்), சட்டநாத கரையாளர் (மக்கள்கட்சி), தனக்கோடி தேவர் (பார்வர்ட்பிளாக்) விஜயராகவன் (ஜனதா), ஹாஜாசெரீப் (இ. காங்) ஆகியோர் பேசினர்.

முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

சில நேரங்களில் எதிர் பாராமல், விபரீதம் ஏற்படுகிறது என்ற இயற்கை நெறிக்கு ஏற்ப ஷேக் அப்துல்லாவின் மரணம் நிகழ்ந்திருக்கிறது.

அனைவரும், உளமார நெக்குருக உணர்ச்சியை கட்டுப்படுத்த வேண்டிய வேதனைக்கு, காஷ்மீர, இந்திய விடுதலைக்கு மாபெரும் தியாகம்செய்தவர்; என்றும் இந்திய மக்களின் மனதில் மறக்க முடியாத இடத்தைப் பெற்றவர் ஷேக் அப்துல்லா.

### கோகினூர் மாளிகைக்கு ஷேக் பெயர்

அவர் மறைந்து விட்ட நிலையில் அவரது நினைவுகள் சிலவற்றை நான் நினைவுபடுத்திக் கொள்ளுகிறேன்.

எதிர்க்கட்சித் தலைவர் தனது எண்ணங்களை வெளிப்படுத்தினார்.

ஷேக் அப்துல்லா தமிழ

(2-ம் பக்கம் பார்க்க)

# பேரறிஞர் அண்ணா பிறந்தநாள் விழா

## பெரியகுளத்தில்

# புரட்சித்தலைவர் பேசுகிறார்

காலம்: 15-9-82 மாலை 6 மணி

இடம்: பெரியகுளம்

தலைமை : திரு. நல்லவேலுச்சாமி (நகர செயலாளர்)

முன்னிலை : திரு. கோபாலகிருஷ்ணன் எம் எல். ஏ. திரு. சையத்கான் (புறநகர் மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர்)

வரவேற்புரை: திரு. சேடப்பட்டி முத்தையா எம். எல். ஏ. (புறநகர் மாவட்ட செயலாளர்)

1. மொழி காக்க உயிர் நீத்தோர் குடும்ப நலநிதி.
2. மாற்றாரால் படுகொலைக்கு ஆளான நம் உடன்பிறப்புக்களின் குடும்பங்களுக்கு உதவி நிதி.
3. அதிக மதிப்பெண் பெற்ற பள்ளி மாணவர்களுக்கு பரிசு மற்றும் ஊக்க நிதி ஆகியவற்றை வழங்கி

சிறப்புரை : மாண்புமிகு **புரட்சித்தலைவர்**

பேசுவோர் :

மாண்புமிகு **டாக்டர் நாவலர்** மாண்புமிகு **எஸ்.டி.எஸ்.**

பொதுச் செயலாளர் **ப. உ. ச.** மாண்புமிகு **காளிமுத்து**

பொருளாளர் **பண்ருட்டி ராமச்சந்திரன்** மாண்புமிகு **ராஜாமுகமது**

திரு. மோகனரங்கம் எம். பி, திரு. முனுஆதி திரு. மதுரை முத்தண்ணன் திரு. பொ. அன்பழகன் எம். பி, திரு. வெ. பாலகுரு

திரு. திருச்சி சவுந்திரராசன் திரு. லியாகத்அலிகான் திரு. ஜக்கையன் (பெரியகுளம் கழக வேட்பாளர்) நன்றியுரை: திரு. அ. முத்தையா (ஒன்றியச் செயலாளர்)

குறிப்பு: அன்று காலை 6 மணிக்கு பெரியகுளம் அண்ணா சிலைக்கு புரட்சித்தலைவர் மாலை அணிவிக்கிறார்.

அமைச்சர் ராஜாமுகமது புகழஞ்சலி

# இந்திய நாட்டின் பாதுகாப்பு அரணாக திகழ்ந்த சேக்அப்துல்லா

**சென்னை, செப். 9— இந்தியாவின் பாதுகாப்பு அரணாகத் திகழ்ந்தவர் சேக்அப்துல்லா என்று அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.**

சட்ட மேலவை இன்று கூடியதும் தலைவர் ம. பொ. சி. ஜம்மு காஷ்மீர் முதல்வர் ஷேக்அப்துல்லா இயற்கை எய்திய துயரச் செய்தியை மன்றத்திற்குத் தெரிவித்தார். அதனைத் தொடர்ந்து அவை முன்னவர் ராஜா முகமது எழுந்து ஷேக் அப்துல்லா மறைவிற்கு இரங்கல் தெரிவிக்கும் தீர்மானத்தை முன்மொழிந்தார். அப்போது அவர் கூறியதாவது:

காஷ்மீர் சிங்கம் என்று அழைக்கப்படும் காஷ்மீர் முதல்வர் ஷேக்அப்துல்லா இந்திய மக்களின் இதய பீடத்தில்கொலுவீற்றிருக்கிறார். நேரு குடும்பத்திற்கு அவர் நெருங்கிய நண்பர். காஷ்மீரை விட்டு அவர் வெளியேற வேண்டும் என்று அன்றைய மன்னராட்சி அவருக்குக் கட்டளை பிறப்பித்தது. அதனை எதிர்த்து அவர் போராடினார்.

## ஒற்றுமைக்கு வித்திட்டவர்

காஷ்மீர் இந்தியாவின் ஒரு பகுதியாக இருக்க வேண்டும் என்பதில் அசையாத நம்பிக்கை கொண்டவர். ஜாதி மத இன வேறுபாடுகளுக்கு அப்பால் தனது வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர். இந்தியாவில் சிறுபான்மையினர் பாதிப்புக்கு உள்ளாகிறார்கள் என்று வதந்தி கிளப்பப்பட்ட போது அதனை எதிர்த்து மக்களின் ஒற்றுமைக்கும் இந்தியநாட்டின்ஒருமைப்பாட்டிற்கும் பாடுபட்டவர்.

அந்த வகையில் இந்தியாவிற்கு மட்டுமல்ல, இந்தியாவிலுள்ள சிறுபான்மையிருக்கும்அவரது மறைவு பேரிழப்பாகும். இந்தியாவின் பாதுகாப்பிற்கு அவர் ஒருஅரணாக இருந்து வந்தார். தமிழகத்தில் உள்ள கொடைக்கானலிலும் உதகையிலும் அவர் சிறை வைக்கப்பட்ட போது ஏராளமான தமிழ் மக்களை சந்திக்கும் வாய்ப்பு அவருக்கு ஏற்பட்டது. அவர் உலாவச் சென்ற போதெல்லாம் தமிழ் மக்களைச் சந்தித்து அவர்கள் ஒற்றுமையுடன் வாழ்வதை நேரில் பார்த்தவர். இந்துக்கள், கிறித்துவர்கள், முஸ்லிம்கள் இவர்கள் அனைவரும் அண்ணன்தம்பி உறவோடு வாழ்வதைப் பார்த்து அவர் மகிழ்ச்சி அடைந்திருக்கிறார். அவர் கடவுள் நம்பிக்கை உடையவர். கோட்பாடுகள் மாறுபட்டிருந்தாலும் இந்திய மக்கள் ஒற்றுமையுடனும் ஒருமைப்பாட்டுடனும் வாழவேண்டும் என்பதை வலியுறுத்திவந்தவர். அவர் ஒரு மாமேதை. அவரது குடும்பத்தினருக்கும் காஷ்மீர் மக்களுக்கும் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறோம்,

இவ்வாறு அவை முன்னவர் அமைச்சர் ராஜா முகமது கூறினார்.

அடுத்து எதிர்க்கட்சித் தலைவர் சங்கரலிங்கம், பி. ஆர். தாமஸ், மியாகான், மீனாட்சி சுந்தரம், கே. ஆர். நல்லசிவம், முத்துசாமி ஆகியோர் ஷேக்அப்துல்லா மறைவிற்கு தங்கள் இரங்கலைத் தெரிவித்துப் பேசினர்.

சேக்அப்துல்லா மறைவுக்குஅனுதாபம்:

## தமிழக அரசு அலுவலகம் மூடப்பட்டது

சென்னை, செப். 9— காஷ்மீர் முதல்வர் சேக் அப்துல்லாவின் மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கும் முறையில் தமது அலுவலகங்கள் அனைத்திற்கும் தமிழக அரசு விடுமுறை விடுத்துள்ளது. சேக்அப்துல்லாவிற்கு அஞ்சலி செலுத்தும் முறையில் எல்லா அலுவலகங்களும் மூடப்பட்டன. அரசாங்க அலுவலகங்களில் பறக்கும் தேசிய கொடி அரைக் கம்பத்தில் பறக்கவிடப்பட்டது.

சேக் அப்துல்லா மறைவிற்கு இரங்கல் தெரிவிக்கும் முறையில் மத்திய அரசும் தமது அலுவலகங்களுக்கு விடுமுறைவிடுத்துள்ளது.

ம. பொ. சி. உரை

# மாநில சுயாட்சிக்கு வழிகாட்டி சேக்அப்துல்லா

**சென்னை, செப். 9- மாநில சுயாட்சிக்கு வழி காட்டியாக இருந்த சேக்அப்துல்லாவுக்கு நினைவுச் சின்னம் எழுப்ப வேண்டும் என்று மேல்வைத்தலைவர் ம. பொ. சி கூறினார்.**

சேக் அப்துல்லா மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து மேலவைத் தலைவர் ம. பொ. சி, இன்று மேலவையில் பேசியதாவது:—

நாம் ஒரு மாபெரும் தேசபக்தரை இழந்து விட்டோம். அவரது மறைவுக்கு எனது இரங்கலையும் அஞ்சலியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

வெள்ளையனே வெளியேறு என்று நடந்த இந்திய விடுதலைப் போராட்டத்திலும் காஷ்மீரில் சமஸ்தான மன்னராட்சி வெளியேற வேண்டும் என்ற இயக்கத்திலும் ஷேக்அப்துல்லா பெரும் பங்கு கொண்டவர்.

காஷ்மீரில் ஷேக் அபதுல்லா மன்னராட்சியால் சிறைப்படுத்தப்பட்டபோது இந்தியாவின் பிரதமராக நேரு இருந்தார். ஷேக் அப்துல்லா சிறைப்படுத்தப்பட்ட செய்தி அறிந்து நேரு காஷ்மீர் விரைந்து தன்னையும் கைது செய்யுப்படி கோரினார். ஷேக் அப்துல்லா சிறந்த உத்தமமான ஒரு இஸ்லாமியர். தேசிய மகன். காஷ்மீரில் மத்திய ஆதிக்கம் வந்து விடக்கூடாதே என்பதல் கண்ணும் கருத்துமாக இருந்தவர். உலகத் தலைவர்களுக்கு அவர் ஒரு வழிகாட்டியாக இருந்தார்.

## ஆதிக்கவெறியை புறமுதுகிட செய்தவர்

ஆதிக்கம் எந்த வடிவில் வந்தாலும் அதனை எதிர்க்கும் வீரராக விளங்கினார். என் போன்றவர்களுக்கு அவர் ஒரு வழிகாட்டி. சுயாட்சி வேறு சுயநிர்ணயம் வேறு.

அது எப்படி அமைய வேண்டும்என்பதை வகுத்தவர். உண்மையானதேசியவாதி. அவர் சிறிதுகாலம் கொடைக்கானலில் சிறைப்பட்டு இருந்திருக்கிறார். அவர் சிறைஇருந்த இடம் சிறப்பு வாய்ந்தது. அந்த இடத்தில் ஒரு நினைவுச்சின்னம் அமைய வேண்டும் என்பது எனது விருப்பம்.

மாநில சுயாட்சிக்கு வழிகாட்டியாக இருந்த அவருக்கு நாம் தான் நினைவுச் சின்னம் அமைத்து முன்னோடியாக இருக்க வேண்டும்.

இவ்வாறு ம.பொ.சி கூறினார். இரங்கல் தீர்மானம் நிறைவேறியது. அதனைத் தொடர்ந்து சட்ட மேலவைக்கூட்டம் ஒத்திவைக்கப்பட்டது.

சேக்அப்துல்லா இறுதி ஊர்வலத்தில்

## பிரதமர் இந்திரா பங்கேற்கிறார்

ஸ்ரீநகர், செப். 9— காஷ்மீர் முதலமைச்சர் சேக் அப்துல்லாவின் இறுதி ஊர்வலத்தில் பிரதமர் இந்திரா காந்தி பங்கேற்க, நாளை (10ந் தேதி)காலை ஸ்ரீநகர் வருகிறார்.

## நீதிபதி மகராஜன் மறைவு

சென்னை, செப். 6— சென்னை உயர்நீதி மன்ற முன்னாள் நீதிபதி எஸ். மகராஜன் இன்று காலை காலமானார்.

நீண்ட நாட்களாகவே அவர் உடல்நலம் குன்றி இருந்தார்.

அவருக்கு மனைவியும், 4 மகன்களும், 3 மகள்களும் உள்ளனர்.

32 ஆண்டுகளுக்கும் மேலாக அவர் நீதிபதியாக பணிபுரிந்துள்ளார். தமிழ்நாடு மாநில ஆட்சி மொழிக் குழுவின் தலைவராகவும் இரண்டு ஆண்டு காலம் மகராஜன் பணியாற்றியுள்ளார்.

## அரிசி மூட்டை பறிமுதல்

கோவை, செப். 9— கோவையிலுள்ள உணவு பொருள் கடத்தல் பிரிவு அலுவலக போலீஸ் இன்ஸ்பெக்டர் கம்ணசன் தலைமையில் போலீசார் சேலம் மாவட்டம் ராசிபுரத்தில் திடீர் சோதனை நடத்தினார்கள்.

சோதனையில் ராசிபுரத்தில் உள்ள எண்ணெய் மில்லில் 665 மூட்டை கடலை காயும், 172 மூட்டை நிலைக் கடலைபருப்பும் பறிமுதல் செய்யப்பட்டது. இவற்றின் மதிப்பு சுமார் ஒரு லட்சத்து 80 ஆயிரம் ருபாயாகும்.

எண்ணெய் மில் அதிபர் பஞ்சநாதன் மீது உணவுப்பொருள் கடத்தல் பதுக்கல் தடுப்பு பிரிவு போலீசார் வழக்கு பதிவு செய்துள்ளனர்.

## புரட்சித் தலைவர் அறிவிப்பு...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

கத்தில் சிறைவைக்கப்பட்டிருந்த கோகினூர் மாளிகைக்கு, கோகினூர் ஷேக் அப்துல்லா மாளிகை எனப் பெயர் வைக்கலாம் என்றார். இது தமிழக மக்களின் எண்ணத்தைப் பிரதிபலிக்கிறது.

மறைந்து விட்ட ஷேக் அப்துல்லா அவர்களின் பிறந்தநாள் டிசம்பரில் வருகிறது.

அவரது பிறந்த நாளில் அந்தப் பெயர் சூட்டப்படும். அதில் இங்குள்ள அனைத்துக் கட்சியினரும் கலந்துகொண்டு பெருமைப்படுத்த வேண்டும். மக்கள் சக்தி இருந்தால் தனி மனிதன் எதையும் சாதிக்கமுடியும் என நிரூபித்த மாபெரும் மனிதர் ஷேக் அப்துல்லா.

முஸ்லிம்சமஸ்தானத்தை எதிர்த்து முஸ்லிமும், இந்து சமஸ்தானத்தை எதிர்த்து இந்துவும் போராடினால் அது பிரச்சினைக்கு இடமளிக்காது. ஆனால் இந்து சமஸ்தானத்தை எதிர்த்து முஸ்லிம் மனிதர் போராடினார். அதற்கான நியாய உணர்வுகளை உலகமே ஆதரித்தது. அது ஒன்றே அவரது நியாய உணர்வுகளுக்குப் போதுமானது.

## மாற்றாரை மதிக்கும் மனப்பாங்கு

அவர் சாதாரண மனிதர்களின் உணர்வுகளுக்கு மதிப்பளித்தவர். மும்மொழித் திட்டம் பற்றி அவர் ஒரு கருத்தை வெளியிட்டார்.

நான் அண்ணாவின் இரு மொழிக் கொள்கையை விளக்கிக் கடிதம் எழுதினேன். அதைப் பார்த்து அவர் என்னை அலட்சியப் படுத்தவில்லை.

டெல்லியில் நடந்த ஒரு நிகழ்ச்சியில் அவரைச் சந்தித்து விளக்கினேன். அதற்குப்பிறகு அவர் தனது கருத்தை வலியுறுத்தவில்லை.

எவ்வளவு சாதாரண மனிதராக இருந்தாலும் அவர்களின் உணர்வுகளுக்குமதிப்புத்தரவேண்டும் என்பதில் அக்கறை கொண்டவர்.

## ஏழை பங்காளன்

நெடுமாறன் பேசும் போது காஷ்மீர் மாநிலத்தில் வெளி மாநிலத்தினர் நிலம் வாங்க இடமில்லை என்பது பற்றி கூறினார். இது பற்றி சேக் அப்துல்லாவிடம் அப்போது எடுத்துக் கூறினேன். "எங்கள் மக்கள் ஏழைகள். இன்னும் வறுமையில் உழன்று கொண்டுள்ளார்கள். சுதந்திரத்தின் முழுப்பயனும் அவர்களுக்கு கிடைக்கவில்லை. வறுமை, ஏழ்மை இருக்கும் இந்த நேரத்தில் பண முதலைகள் பணத்தைக் கொட்டி நிலங்களை வாங்கிவிடுவார்கள்.

எங்கள்மக்களுக்குஇடம் இல்லாமல் போய்விடும். அவர்கள் அநாதை ஆகிவிடக்கூடாது என்பதில் அக்கறை காட்டுகிறேன்" என ஷேக் அப்துல்லா கூறினார்.

காஷ்மீரில் சமஸ்தான ஆட்சி இருந்தபோது நேரு அங்கே வரக்கூடாது என தடை விதித்திருந்தார்கள்.

என்ன இருந்தாலும் தடையை மீறி நேரு வர வேண்டும் என்றார் ஷேக்அப்துல்லா. நேரு சென்றபோது என்ன நடந்தது என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

அவர் பதவியில் இருந்த போது அல்ல—சாதாரண மனிதராக இருந்து அதைச் செய்தார்.

அப்படிப்பட்ட மனிதரின் மறைவுக்கு, இங்கே தெரிவிக்கப்பட்ட உணர்வுகளோடு எனது உணர்வுகளையும் இணைத்துக் கொள்கிறேன்.

சுதந்திரத்திற்கு முன்பும், அதற்குப் பிறகும் நாடு எப்படி இருக்கிறது என்பதை சிந்திக்க வேண்டும் என சட்டநாதக்கரையாளர் குறிப்பிட்டார்.

சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்டவர்களின் மறுபதிப்பாகத்தான் இப்போது நடைமுறையில் உள்ள நிலை ஏற்பட்டுள்ளது.

## நியாயவாதி

நியாயத்தை யாருக்கும் விட்டுக் கொடுக்காமல் தன்னுடைய மதம் தன்னுடைய மதத்தைச் சாராதவர்கள் என பிரித்துப் பார்க்காமல் ஷேக் அப்துல்லா இருந்ததால் தான் இன்று லட்சக்கணக்கான மக்கள் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அவரது கொள்கைகளைப் பின்பற்றி இந்த மாநிலமும் இந்தியத்துணைக்கண்டமும் உங்கள் நல் ஆலோசனைகளோடு சேர்ந்து பணியாற்றும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

57-வது பிறந்தநாள்:

# புரட்சித்தலைவரிடம் அமைச்சர் ஆர். எம். வீ. வாழ்த்துப் பெற்றார்

## 57 ஏழைகளுக்கு சேலை-வேட்டி வழங்கினார்

**சென்னை, செப். 9- அமைச்சர் ஆர். எம். வீ க்கு இன்று 57-வது பிறந்தநாள். பிறந்தநாளில் முதல்வர் புரட்சித் தலைவரிடம் ஆசி பெற்றார். பேரறிஞர் அண்ணா நினைவிடம் சென்று மலர் வளையம வைத்து வணங்கினார்.**

செய்தி-அறநிலையத் துறை அமைச்சர் தனது 57 வது பிறந்த நாளை எளிமையாகக் கொண்டாடினார்.

காலையில் பேரறிஞர் அண்ணா நினைவிடத்திற்குச்சென்று மலர் வளையம் வைத்துவனங்கினார்.

பிறகு முதல்வர் புரட்சித்தலைவரை நேரில் சந்தித்து பிறந்தநாள் ஆசியினைப் பெற்றார்.

தமது 57-வது பிறந்த நாளில்57 ஏழைஎளியவர்களுக்கு வேட்டி-சேலைகளை ஆர்.எம்.வீ. வழங்கினார்.

ஏராளமானவர் வந்திருந்து ஆர்.எம்.வீக்கு பிறந்தநாள் வாழ்த்துக் கூறினர்.

மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ. சி. அமைச்சருக்கு ஆர்.எம்.வீ.பிறந்த நாள் வாழ்த்து தெரிவித்தார்.

## அமைச்சர்கள் வாழ்த்து

அமைச்சர் கே. ஏ. கே., திருநாவுக்கரசு, விஜயசாரதி, தமிழக அரசின் டெல்லி சிறப்பு பிரதிநிதி மோகனரங்கம் ஆகியோரும் ஆர். எம். வீக்கு பிறந்தநாள் வாழ்த்துத்தெரிவித்தனர்.

சிறுசேமிப்பு துணைத் தலைவர் எஸ். எஸ். ஆர்., சுற்றுலா வாரியத் தலைவர் பாலசுப்பிரமணியம், அன்பழகன் எம். பி., பழக்கடை பாண்டியன், பாலகுரு, கழக எம். எல். ஏக்கள் கோவைத்தம்பி, முத்துகிருஷ்ணன், குலசேகர பாண்டியன், முன்னாள் எம். பி. ஆலடி அருணா, பாக்கூர் சுப்பிரமணியம், 'தாய்' ஆசிரியர் வலம்புரி ஜான், பி.டி.எஸ். வளர்மதி, மற்றும் ஏராளமானவர் மாலை அணிவித்து வாழ்த்துத் தெரிவித்தனர்.

சுற்றுலா வாரிய ஊழியர்கள் மாலை அணிவித்து வாழ்த்துத் தெரிவித்தனர்.

## பெட்ரோலியம் பொருட்கள் ஆலோசனைக் கமிட்டி

சென்னை, செப். 9— பெட்ரோலியம் பொருள்கள் ஆலோசனைக் குழு ஒன்றை போக்குவரத்துத் துறை அமைச்சர் முத்துசாமி தலைமையில் கழக அரசு அமைத்திருக்கிறது.

இந்தக்குழுவில் 18 பேர் உறுப்பினர்களாக இருப்பார்கள் இவர்களில் 7பேர் அரசு அதிகாரிகள் மற்றவர்கள் தனியார் நிறுவனத்தைதச்சேர்ந்தவர்கள்

சட்ட மேலவையில் அமைச்சர் முத்துசாமி இத்தகவலைத் தெரிவிததார்.

சேக் அப்துல்லாமறைவு:

## சட்டசபை மேலவை ஒத்திவைப்பு

சென்னை, செப். 9— காஷ்மீர் முதலமைச்சர் சேக் அப்துல்லாவின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும்தீர்மானத்தை நிறைவேற்றிய பிறகு, சட்டசபை, மற்றும் சட்டமன்றமேலவை ஆகிய இரு சபைகளும் நாளைவரை (10-ந் தேதி) ஒத்திவைக்கப்பட்டது.

மத்தியபிரதேசத்தில் அவசரச்சட்டம்:

## லஞ்சம் வாங்கினால் தூக்கு தண்டனை

புதுடெல்லி, செப். 9- அதிகாரிகள் உட்பட லஞ்சம் வாங்குவோர் மீது கடும் தண்டனை விதிக்க வகை செய்யும் அவசரச்சட்டம் ஒன்று மத்திய பிரதேச மாநிலத்தில் கொண்டு வரப்பட்டுள்ளது.

லஞ்சம் வாங்குவோருக்கு 6 மாத சிறை தண்டனை அல்லது அபராதத்தில் இருந்து தூக்குத் தண்டனைவரை விதிக்க இச் சட்டம்வகை செய்கிறது.

இச்சட்ட விதிகளை மாநில முதலமைச்சர் அர்ஜுன்சிங் நிருபர்களிடம் விளக்கினார்.

## கலைக்குழு முகவரி

T. M ஜானி கலைக்குழு
7, தர்மராஜா கோவில்தெரு,
கொருக்குப்பேட்டை,
சென்னை—21.

முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்துள்ள

# இலவச பல்பொடி திட்டத்திற்கு ரூ. 2.42 கோடி நிதி ஒதுக்கீடு

**சென்னை, செப். 9. சிறுவர்களுக்கு இலவச பல்பொடி வழங்க 2 கோடியே 41 லட்சத்து 92 ஆயிரம் ரூபாய் அனுமதிக்கப்பட்டுள்ளது. சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்ட துணை மானியக்கோரிக்கையில் இந்த தகவல் தரப்பட்டுள்ளது.**

முதலமைச்சர்சத்துணவு திட்டத்தின்கீழ் இயங்கும் நிலையங்கள் மூலம் கிராமக் குழந்தைகளுக்கு இலவசமாக பல்பொடிவழங்க இந்தத்தொகை அனுமதிக்கப்பட்டுள்ளது.

துணை மதிப்பீட்டில் ஒரு கோடியே 20 லட்சத்து 96 ஆயிரம் ரூபாய் சேர்க்கப்பட்டுள்ளது.

கிராமப்புற மக்களது பல் நலன் காக்க இலவச பல்பொடி தரும் திட்டத்தை முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்து இருப்பது தெரிந்ததே.

இந்த இலவச பல்பொடி திட்டத்திற்கு துணை மானியக் கோரிக்கையில் அதற்கு நிதி ஒதுக்க அரசு அனுமதி அளித்துள்ளது.

பள்ளிகளில் 5 வயது முதல் 9 வயது வரையிலான சிறார்களுக்கு உணவளிக்க 1982-83-ம் ஆண்டு ரூ. 19 கோடியே 44 லட்சத்து 36 ஆயிரம் தேவைப்படுகிறது.

இந்தத் தொகை துணை மதிப்பீட்டில் சேர்க்கப்பட்டுள்ளது.

## தமிழில் பயிற்சி

தொடக்க நிலைவகுப்புகளில் தமிழ் மொழித் திறனை மேம்படுத்த ஆசிரியர்களுக்கு புத்தறிவு பயிற்சி திட்டத்திற்கு அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

இதற்கு ரூ.2.62 லட்சம் துணை மானியக் கோரிக்கையில் கோரப்பட்டுள்ளது.

பெண்கள் உயர்நிலைப் பள்ளிகளில் 150 இடைநிலை ஆசிரியைகளை நியமிக்க அரசுஒப்புதல் அளித்துள்ளது. இதற்காக ரூ.2.30 லட்சம் அனுமதிக்கப்பட்டுள்ளது.

அரசுஉயர்நிலைப்பள்ளிகளிலும் மேல்நிலைப் பள்ளிகளிலும் 571 கழிப்பறைகள் கட்ட அரசு அனுமதித்துள்ளது. இந்த தகவல் துணை மானியக் கோரிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

பி.டி. ஆசிரியர்களுக்கு சிறப்பு நிலை ஆசிரியர் தரம் அளிக்க அரசு அனுமதி வழங்கியுள்ளது. இதற்காக ரூ.15 லட்சத்து 12 ஆயிரம் அனுமதிக்கப்பட்டுள்ளது.

காவல்துறை டெபுடி இன்ஸ்பெக்டர் பதவிகள் 245ஐ காவல்துறை இன்ஸ்பெக்டர் பதவிகளாக நிலை உயர்த்த அரசு ஒப்பதல் அளித்துள்ளது.

கோவை, மதுரை மாநகரங்களில் பத்து குதிரைகள் இருக்கும் வகையில் குதிரைப்படை பிரிவு ஏற்படுத்த அரசு அனுமதி வழங்கியுள்ளது.

காவல்துறைபணியாளர்கட்கு மலிவு விலையில் லெவி சர்க்கரை வழங்கவும் அரசு அனுமதி வழங்கியுள்ளது.

இதற்காக எதிர்பாராத செலவு நிதியில் இருந்து ரூ.3 லட்சத்து 26 ஆயிரம் முன்பணம் அனுமதிக்கப்பட்டுள்ளது.

ஆட்சிச் சொல்லகராதியின் நான்காம் பதிப்பை வெளியிடுவது தொடர்பாக அரசு ரூ. 8.80 லட்சத்துக்கு ஒப்புதல் அளித்துள்ளது.

திருநெல்வேலியில் பொறியியல் கல்லூரி தொடங்குவது தொடர்பாக பொதுமக்களுக்கு வசதிகள் செய்து தர நெல்லை, பாளையங்கோட்டை, மேட்டுப் பாளையம் நகராட்சிகளுக்கு ரூ. 49 லட்சத்து 40 ஆயிரம் செலவிட அரசு அனுமதி வழங்கியுள்ளது.

## 378 விரிவாக்க அதிகாரிகள்

இருபது அம்ச திட்டத்தை செயல்படுத்துவதற்காக (ஆதிதிராவிடர் நலன்) அதிகாரி பதவிகள் 378-க்கு அரசு அனுமதி வழங்கியுள்ளது.

சென்னை மாநகரில் கல்லூரி மாணவர்களுக்கென மாணவர் இல்லத்தைப்புதிதாகக்கட்ட அரசு அனுமதி வழங்கியுள்ளது.

முன்னாள் சட்டமன்ற உறுப்பினர்கள் அரசு மருத்துவமனைகளில் இல்லாத மருந்துகளை வெளி அங்காடியில் வாங்கியசெலவைஈடுசெய்வதற்காக அரசு ரூ. 2 லட்சம் அனுமதித்துள்ளது.

தமிழ்நாடு திரைப்பட தொலைக்காட்சி நிலையத்தில் படம் தயாரிக்கும் பிரிவுக்கு ரூ. 5.20 லட்சத்துக்கு மேற்படாமல் 35 மில்லி மீட்டர் அளவுள்ள வண்ணமேற்றும் கருவிகளையும் ரூ. 10.10 லட்சத்துக்கு மேற்படாமல் தானியங்கி வண்ணப்படி எடுக்கும் கருவிகளையும் வாங்க அரசு அனுமதி அளித்துள்ளது.

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் நூற்றாண்டு விழாவில் சிறப்பு மலர் ஒன்றை வெளியிடும் செலவிற்காக ரூ. 4 லட்சம் அனுமதித்துள்ளது.

## நேருவுக்கு சிலை

விவசாயிகள் தங்கள் விளை பொருட்களைச் சேமித்து வைக்க மத்திய அரசு உதவியுடன் 62 கிராமக் கிடங்குகள்

(5-ம் பத்தி பார்க்க)

ரயில்நிலையங்களில்

## பெண் போலீஸ் பணிபற்றி 2 சினிமா படங்கள்

சென்னை, செப். 9— பெரிய ரயில் நிலையங்களில் பெண் காவலர்கள் ஆற்றும் பணியை விளம்பரப்படுத்த 2 செய்திப் படங்களை எடுக்க அரசு அனுமதித்துள்ளது.

இதற்கு ரூ. 2 லட்சத்து 40 ஆயிரம் செலவிட அரசு அனுமதி வழங்கியுள்ளது.

சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்ட துணை மானியக் கோரிக்கையில் இந்தத் தகவல் வெளியிடப்பட்டுள்ளது.

## ப.உ.ச. கடிதம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

**பலம் உங்கள் உழைப்பில் தான் உள்ளது!**

பேரறிஞர் அண்ணா அவர்களின் இலட்சியக் கனவு நிறைவேற நம கழகத்தை விட்டால் வேறு கட்சியில்லை! நாம் பெற்றிருக்கும் மாண்புமிகு புரட்சித்தலைவரை விட்டால் வேறு தலைவரில்லை!

*நாம் விழா எடுக்கப்போவது நம் விழிகளைத் திறந்து வழியைக் காட்டிய அண்ணனுக்கு!*

அறிஞர் அண்ணா அவர்களின் பேச்சு திருவாசகம்! அவர் எழுத்துக்கள் திருக்குறள்! அவர் பார்வையே அருட்பா! அவர்நடையே தென்றல்! அவர்குரலே தேன்மழை! அவர் நம்மை அரவணைத்த முறை தாய்மை! அவர் அறிவோ கடல்! அவர் தோற்றமோ எளிமை! அவர் நினைவோ நாட்டின் மறுமலர்ச்சி!

அந்தத்தங்கத் தலைவன் பிறந்தநாளைத்தான் ஒற்றுமையோடு கொண்டாட அழைக்கிறேன்! வேண்டுகிறேன்!

காட்டாற்று வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தி, வகைப்படுத்தி வாய்க்காலில் கொண்டு வந்தால் தான் கழனிக்குப் பயன்படும்! பயிர் செழிக்கும்!

**அதே போல்தான் நாம் ஒற்றுமையோடு கூடி ஊர்வலம சென்றால்தான் நம்பலம் தெரியும்... பெருகும்!**

**அண்ணனுக்கு நாம் எடுக்கும் விழா சுய விளம்பரத்திற்காகவோ. அரசியல் வியாபாரத்திற்காகவோ நடத்தப்படும் திருவிழாவல்ல! இதய சுத்தியோடு நம்மை ஆளாக்கிய தலைவனுக்கு நாம் ஆற்றும் நன்றிக் கடன்!**

'துலாபார விழா' காண உங்களை அழைக்கவில்லை! நமக்காகவும், நம் நாட்டிற்காகவும், எதிர்கால சந்ததியர்களுக்காகவும் காலமெல்லாம் உழைத்துதன்னையே தேய்த்து நம் வாழ்வில் விளக்கேற்றிய தலைவனுக்கு 74-வது பிறந்நாள் விழா எடுக்க அழைக்கிறேன்.

'நான்' என்று தவறுதலாக எழுதிவிட்டேன்! மன்னித்துக்கொள்ளுங்கள்! 'நான்' என்று என்னை அழைத்துக்கொள்ள எனக்குத் தகுதியும் இல்லை! அகந்தையுமில்லை! கழகத்தின் தொண்டன் என்ற முறையில் தான் அழைக்கிறேன்!

அன்புள்ள,

**ப. உ. ச.**

சுதந்திரத்திற்காக போராடியவர்:

# இந்திய வரலாற்றில் தனிப்பெரும் தலைவராக விளங்கியசேக்அப்துல்லா

முதல்வர் புரட்சித்தலைவர் புகழஞ்சலி

**சென்னை. செப். 9- "இந்திய வரலாற்றில் தனிப்பெரும் தலைவராக விளங்கியவா, காஷ்மீர் முதலமைச்சர் சேக் அப்துல்லா" என முதல்வர் புரட்சித்தலைவர். சேக் அப்துல்லாவின் மறைவை ஒட்டி விடுத்த அனுதாபச் செய்தியில் புகழஞ்சலி தெரிவித்துள்ளார்.**

காஷ்மீர் முதலமைச்சர் சேக் அப்துல்லாவின் மறைவை அடுத்து முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்துள்ள இரங்கல் செய்தியில் கூறியிருப்பதாவது:—

இந்திய வரலாற்றில் காஷ்மீர் முதலமைச்சர் சேக் அப்துல்லா தனிப்பெரும் தலைவராகவிளங்கியவர். சுதந்திரத்திற்காக போராடியவர். நமது காலத்தில் குறிப்பிட்டுக் கூறக்கூடியவர்களில் ஒருவராகவிளங்கினார்.

அவரது மரணச்செய்தி கேட்டு, அதிர்ச்சியும் வருத்தமும்அடைந்தேன்.

இந்திய அரசியல் வரலாற்றில், போராட்டங்கள் பலவற்றில் ஈடுபட்டு தியாகங்கள் புரிந்தவர். அவரது தேசப்பற்றும், துணிவான பழக்க வழக்கங்களும், வழக்குகளை சந்திக்க நேர்ந்த போதும் கொள்கைகளை விட்டுக் கொடுக்காத முறையும் கொண்ட தனிப்பெருந்தலைவராக விளங்கினார்.

காஷ்மீரில் நமது அன்பிற்குரிய தலைவரான பண்டித ஜவஹர்லால் நேரு நுழைய தடைவிதிக்கப்பட்ட நேரத்தில் சர்வாதிகாரத்தை எதிர்த்து சேக் அப்துல்லா நடத்திய வீரமிக்க போராட்டம் எனது மனதில் இன்னும் பசுமையாக உள்ளது.

நெருக்கடியான நேரத்தில், ஜம்மு - காஷ்மீர் மாநிலத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்க, சேக் அப்துல்லாவை பிரதமர் இந்திராகாந்தி அழைத்ததே, அவரின் சிறப்பை எடுத்துக் கூற போதுமானதாகும்.

நான் அவரை சில முறைகளே சந்தித்திருந்த போதிலும் என்மீது அவர் காட்டிய அன்பு எனது வாழ்க்கையில் மறக்கமுடியாத மிக முக்கியமான நினைவுகளில் ஒன்றாகும்.

அவரது மறைவுஎனக்கு தனிப்பட்ட முறையில் மிகப்பெரும் இழப்பாகும்.

சேக் அப்துல்லாவின் மறைவால் நாடு முழுவதும் ஏற்பட்டுள்ள துயரத்தில் தமிழ்நாடும் பங்கேற்கிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் தனது இரங்கல் செய்தியில்தெரிவித்துள்ளார்.

விமானம் மூலம்

## வெள்ளப் பகுதிகளை பிரதமர் பார்த்தார்

புதுடெல்லி, செப். 9— பிரதமர் இந்திரா காந்தி 3 மாநிலங்களில் ஏற்பட்டுள்ள வெள்ள பாதிப்பை விமானம் மூலம் பார்வையிட்டார்.

உத்திரப்பிரதேசம், ஒரிசா, பீகார் முதலிய மாநிலங்களில் வெள்ளம் சூழ்ந்துள்ளது.

பாதிக்கப்பட்ட பகுதிகளைப் பிரதமர் இந்திரா விமானத்தில் பறந்தபடி பார்வையிட்டார்.

நிவாரண உதவிகள் பற்றி அதிகாரிகளுடன் விவாதித்தார்.

அமைச்சர் ஆர். எம். வி. தகவல்:

# அயல்நாடுகளில் பாரதி புகழ் பரப்ப அறிஞர்கள் குழு

**சென்னை. செப். 9- பாரதியாரின் புகழையும் கொள்கைகளையும் வெளிநாடுகளில் பரப்ப வெளிநாடுகளுக்கு கலைஞர்கள் குழு ஒன்றையும் அறிஞர்கள் குழு ஒன்றையும் அனுப்ப தமிழகஅரசு தீர்மானித்திருக்கிறது என்று சட்ட மேலவையில் செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர் எம் வீ தெரிவித்தார்.**

நேற்று சட்ட மேலவையில் கழக கொறடா டாக்டர் ஜனார்த்தனம் இதுபற்றிய கேள்விஒன்றை எழுப்பினார். அதற்குப் பதில் அளித்து அமைச்சர் கூறியதாவது:-

வெளிநாடுகளில் பாரதியாரின் புகழ் ஓங்க வேண்டும் என்பதில் அரசு தீவிரமாக இருக்கிறது.

வெளிநாடுகளில் பாரதியாரின் கொள்கைகளை பரப்புவதற்கும் புகழை மேலோங்க செய்வதற்கும் வெளிநாடுகளுக்கு கலைஞர்கள் குழு ஒன்றை அனுப்பவும், அறிஞர்கள் குழு ஒன்றை அனுப்பவும் மத்திய அரசிடம் அனுமதி கோர தமிழக அரசு தீர்மானம் செய்திருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார்.

மற்றொரு கேள்விக்குப் பதிலளித்த அமைச்சர் மேலும் கூறியதாவது:—

பாரதியாரின் நூற்றாண்டு விழாவையொட்டி பல்வேறு வளர்ச்சித் திட்டங்களைத் தமிழக அரசு அறிவித்திருக்கிறது.

## 40 பெண்கள் மேல்நிலைபள்ளி

1982—83ல் 10 பெண்கள் உயர்நிலைப் பள்ளிகள் துவங்க அனுமதி வழங்கப்பட்டுள்ளது. 1983-84-ஆம் ஆண்டில் 40 பெண்கள்உயர்நிலைப் பள்ளி, அல்லது மேல் நிலைப்பள்ளி தொடங்க நடவடிக்கைகள் மேற்கொள்ள தீர்மானிக்கப்பட்டுள்ளது.

## பெண்கள் பாலிடெக்னிக்

பெண்கள் பல்கலைக் கழகம் அமைப்பது பற்றி ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. அந்தக் குழுவின் அறிக்கை அடுத்த மாதம் எதிர் பார்க்கப்படுகிறது. அதே போல பெண்கள் பாலிடெக்னிக் நிறுவ இந்த ஆண்டிலேயே ஒருகுழு அமைக்கப்படும். அந்தக் குழு சமர்ப்பிக்கும் அறிக்கைப்படி இது செயல் படுத்தப் படும்.

எட்டயபுரத்தில் கூட்டுறவு நூற்பாலை ஒன்று அமைக்கப்படவிருக்கிறது. ரூ. 3 கோடியே41 லட்சத்து 96 ஆயிரம் செலவில் இந்த நூற்பாலை துவக்கமுதலில் திட்டமிடப்பட்டது. பின்னர் இந்ததொகை 4கோடியே 97 லட்சத்துக்கு உயர்த்தப்பட்டுள்ளது.

எஸ். ஆர் ராதா- இந்த நூற்பாலையில் எட்டயபுரத்து பகுதி மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதற்கு முன்னுரிமை வழங்க வேண்டும். தவிர நெசவாளர் குடும்பங்களைச் சேர்ந்த பிள்ளைகளுக்கும் வேலைவாய்ப்பு அளிக்க முன்னுரிமை வழங்க வேண்டும.

அமைச்சர் ஆர்.எம்.வீ:- அந்தப் பகுதியில் நெசவாளர் குடும்பங்கள் இருக்குமானால் அவர்களது பிள்ளைகளுக்கும் வேலை வாய்ப்பு அளிக்க யோசிக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் ஆர்.எம்.வீ. கூறினார்.

(2-ம் பத்தி தொடர்ச்சி)

ரூ. 62 லட்சத்தில் கட்ட அரசு அனுமதி வழங்கியுள்ளது.

சென்னையில் பண்டித ஜவகர்லால் நேருவுக்கு சிலை அமைப்பது குறித்து ரூ. 10 லட்சத்து 50 ஆயிரத்துக்கு மேற்படாமல் செலவு செய்ய அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

கலைவாணர் அரங்கில் 250 கிலோ வாட் மின் உற்பத்தி செய்யும் இயந்திரம் அமைக்க ரூ. 8 லட்சத்திற்கு அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

இந்த விவரங்கள் சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்ட துணை மானியக் கோரிக்கையில் தெரிவிக்கப்பட்டுள்ளன.

ஆர்டர்லிக்கு பதில்

## 950 அடிப்படை பணியாளர் நியமனம்

சென்னை, செப். 9— காவல்துறையில் ஆர்டர்லிக்குப் பதில் 950 அடிப்படை பணியாளர்களை நியமிக்க அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

இவர்களில் 33 அடிப்படை பணியாளர்கள் சென்னை மாநகர காவல் அலுவலகத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ளனர்.

துணை மானியக் கோரிக்கையில் இதுபற்றி விளக்கப்பட்டுள்ளது.

காவல்துறையில்

## 825 பதவிகள் மேல்நிலைக்கு உயர்வு

சென்னை, செப். 9— குற்றங்கள் தொடர்பான பணிகளைக் கவனிக்க உதவி சப்-இன்ஸ்பெக்டர்கள் பதவி 825 ஐ காவல்துறை சப்இன்ஸ்பெக்டர் பதவிக்கு உயர்த்த அரசு ஒப்புதல் அளித்துள்ளது.

துணை மானியக் கோரிக்கையில் இதுபற்றி கூறப்பட்டுள்ளது.

## பெண் போலீசாருக்கு மொபட் வண்டிகள்

சென்னை, செப். 9— பெண்சப்இன்ஸ்பெக்டர்களுக்கு 50 மொபட் வண்டிகள் வாங்க அரசு அனுமதித்துள்ளது.

காவல் மையங்களுக்கு 200 மேட்டார் சைக்கிள்களும் வாங்க அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

இதற்காக ரூ. 30 லட்சத்து 50 ஆயிரம் அனுமதித்துள்ளது.

இந்த தகவல் துணை மானியக் கோரிக்கையில் உள்ளது.





Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029.
Editor: E. PAKASURAMAN

மதுரை மாநகரில் கழகம் பெற்ற பெருவெற்றி

# மாநகராட்சி புதிய மேயர் பட்டுராசன்

## துணை மேயராக முனியசாமி தேர்ந்தெடுக்கப்பட்டார்

மதுரை, செப் 9- மதுரை மாநகராட்சியில் புதிய மேயராக கழக உறுப்பினர் பட்டுராசன் நேற்று தேர்ந்தெடுக்கப்பட்டார் கழக உறுப்பினர் முனியசாமி துணை மேயராக தோ்ந்தெடுக்கப் பட்டார்.

குமரியில் மீனவர்கள் வலை வாங்க

## தமிழக அரசு ரூ. 3லட்சம் நிதி உதவி

நாகர்கோவில், செப்.9- குமரிமாவட்டத்தில் 302 மீனவர்கள் மீன்பிடி வலை வாங்க கழக அரசு 3 லட்சம் ரூபாய் அனுமதித்துள்ளது.

கலவரத்தில், வலை, கட்டுமரம் போன்றவைகளை இழந்தவர்கள் இந்த நிதயுதவியைப பெறுகிறார்கள்.

(5-ம் பத்தி தொடர்ச்சி)

போட்டியிட்டார். இதிலும் இந்திரா காங்கிரசும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்டும் போட்டியிட்டன.

கழக உறுப்பினர் முனியசாமி 40 வாக்குகள் பெற்று வெற்றிபெற்றார்.

மேயர் பட்டுராசனையும் துணைமேயர் முனியசாமியையும் பாராட்டி முத்தண்ணன், பாலகிருஷ்ணன் மற்றும் பலர் பேசினார்கள்.

புதிய மேயராக தேர்ந்தெடுக்கப்பட்ட பட்டுராசனும், துணைமேயர் முனியசாமியும் பிறகு அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தனர்.

வெற்றிபெற்ற மேயர் பட்டுராசனும், துணை மேயர் முனியசாமியும் அண்ணாசிலைக்கு மாலை அணிவித்தனர்.

மதுரை மாநகராட்சி கூட்டத்தில் நடந்த தேர்தலில் கழகம் பெருவெற்றி பெற்றுள்ளது.

மதுரை மேயராக இருந்த எஸ். கே. பாலகிருஷ்ணன், துணைமேயர் நவநீதகிருஷ்ணன் பதவிக் காலம் கடந்த 30ம் தேதியுடன் முடிவடைந்தது.

அதைத் தொடர்ந்து புதிய மேயர், துணை மேயர் தேர்தல் நேற்று மாலை நடைபெற்றது.

### கழக உறுப்பினர் கூட்டம்

மாநகராட்சிக் கூட்டத்தில் மேயர், துணை மேயர் தேர்தல் நடைபெறுமுன்ப மாநகராட்சி கழக உறுப்பினர்கள் கூட்டம் அரசினர் விடுதியில் நடந்தது.

இந்தக் கூட்டம் அமைச்சர் குழந்தைவேலு முன்னிலையில் நடைபெற்றது.

கழக உறுப்பினர்கள் 40 பேர்களும், கிறிஸ்துவ ஜனநாயக முன்னணி உறுப்பினர் ஜான் பிரிட்டோவும் இந்த கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

முதல்வர் புரட்சித் தலைவர் கொடுத்தனுப்பிய 3 கவர்களை கூட்டத்தில் காட்டினார்.

முதல் கவரை திறந்து அமைச்சர் குழந்தைவேலு படித்தார்.

"மேயர், துணை மேயர் பதவிகளுக்கு நான் அறிவிக்கும் பெயர்களை முழுமனதுடன் ஏற்பீர்கள் என்று நம்புகிறேன். அவர்களுக்கு வாக்களித்து வெற்றி பெறச் செய்ய வேண்டுகிறேன்" என்று முதல்வர் புரட்சித் தலைவர் எழுதி இருந்ததைப் படித்தார். கழக உறுப்பினர்கள் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

அடுத்த கவர்களில் மேயருக்கான வேட்பாளர் எம். பட்டுராசன், துணை மேயருக்கான வேட்பாளர் முனியசாமி என்று புரட்சித்தலைவர் எழுதி இருந்ததை படித்துக் காட்டினார்.

புரட்சித் தலைவரது கருத்தை அமைச்சர் படித்ததும் கழக உறுப்பினர்கள் வாழ்த்து முழக்கம் எழுப்பினர்.

இதன் பிறகு மாநகராட்சி கட்டிடத்திற்கு கழக உறுப்பினர்கள் வந்தனர்.

பிற்பகல் 2 மணிக்கு மாநகராட்சி கூட்டம் தொடங்கியது.

மாநகராட்சி ஆணையாளர் ஸ்ரீபதி மேயர் தேர்தல் அறிவிப்பை வெளியிட்டார்.

கழக உறுப்பினர் பட்டுராசன் வேட்பு மனுவைக் கொடுத்தார்.

இந்திரா காங்கிரஸ் சார்பிலும், காமராஜ் காங்கிரஸ் சார்பிலும மனு தாக்கல் செய்யப்பட்டது.

போட்டி இருக்கவே 3 25 மணிக்கு வாக்குப் பதிவு நடந்தது.

### மகத்தான வெற்றி

4 மணிக்கு முடிவு அறிவிக்கப்பட்டது.

கழக உறுப்பினர் பட்டுராசன் 40 வாக்குகள் பெற்று வெற்றி பெற்றார் என்று அறிவிக்கப்பட்டது.

கழக உறுப்பினர்கள் கைதட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

காமராஜ் காங்கிரஸ் சார்பில் போட்டியிட்ட மாணிக்கம் 9 வாக்குகள் பெற்றார். இந்திரா காங்கிரஸ் ஆனந்தம் 8 வாக்குகள் பெற்றார்.

புதிய மேயராக தேர்ந்தெடுக்கப்பட்ட பட்டுராசனை முன்னாள் மேயர் முத்தண்ணனும், பாலகிருஷ்ணனும் அழைத்துச் சென்று மேயர் ஆசனத்தில் அமரவைத்தனர்.

மேயருக்குரிய அங்கி, நூறு பவுன் தங்கச்சங்கிலியையும் அமைச்சர் குழந்தைவேலு அணிவித்தார். செங்கோலையும் கொடுத்தார்.

### அண்ணா சிலைக்கு மாலை

பிறகு துணை மேயர் தேர்தலை மேயர் பட்டுராசன் நடத்தினார்.

துணைமேயர் பதவிக்கு கழக சார்பில் முனியசாமி

(1-ம் பத்தி பார்க்க)

## உதகையில் அரசு பாலிடெக்னிக்

உதகை, செப். 9— உதகையில், விரைவில் அரசு பாலிடெக்னிக் தொடங்கப்பட உள்ளதாக மாவட்ட கலெக்டர் ஜெயந்தி தெரிவித்துள்ளார்.

இதில் 5 பாடப் பிரிவுகள் இருக்கும் எனவும் ஒவ்வொரு பிரிவிலும் 45 மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் எனவும் கலெக்டர் கூறியுள்ளார்.

தமிழக அரசு போக்குவரத்துகழகங்கள்

## கேரள அமைச்சர் பாராட்டு

நாகர்கோவில், செப். 9— தமிழக அரசுக்குச் சொந்தமான திருவள்ளுவர் போக்குவரத்துக்கழகம் மற்றும் கட்டபொம்மன் போககுவரத்துக் கழகம் ஆகியவற்றைச் சொந்த தொழிற் பிரிவுகளுக்கு கேரள போக்குவரத்து அமைச்சர் கே.பாலகிருஷ்ணன் சென்று பார்த்தார்.

கேரள அரசு போக்குவரத்து கழகத்திற்காக கட்டப்படும் 15 பஸ்களை அமைச்சர் பார்வையிட்டார்.

பஸ் கட்டும் துறையில் தமிழக அரசு போக்குவரத்துக்கழகங்களின் பணிக்கு கேரள அமைச்சர் பாலகிருஷ்ணன் பாராட்டு தெரிவித்தார்.



# காஷ்மீர் சிங்கம் ஷேக் அப்துல்லா காலமானார்

## மகன் தற்காலிக முதல்வராக பதவி ஏற்பு

ஸ்ரீநகர், செப. 9- காஷ்மீர் சிங்கம் என்று அன்புடன் அழைககப்பட்ட காஷ்மீர முதல்வர் ஷேக் அப்துல்லா நேற்று நள்ளிரவு 12 மணிக்கு மரணம் அடைந்தார்.

ஷேக் அப்துல்லாவின் மூத்தமகன் பரூக் அப்துல்லா தற்காலிக முதல்வராக பதவி ஏற்றார்.

காஷ்மீர் மக்களின் மிகப் பெருந்தலைவராக விளங்கிய காஷ்மீர் முதல்வர் ஷேக் அப்துல்லா 3 மாத காலமாகவே உடல் நலம் குன்றி இருந்தார்.

இருமுறை அவருக்கு மாரடைப்பு ஏற்பட்டது. அவரது உடல்நிலை மிகவும் மோசமாகி இருந்ததால் பிரதமர் இந்திரா காந்தி வந்து பார்த்தார்.

வெளிநாடுகளில் இருந்து உயிர்காக்கும் மருந்துகள் வரவழைக்கப்பட்டு அவரைப் பிழைக்க வைக்க டாக்டர்கள் பெருமுயற்சிகளை மேற்கொண்டனர்.

இரண்டு மூன்று நாட்களாகவே அவரது உடல்நிலை ஆபத்துக் கட்டத்தில் இருந்தது.

நேற்று ஷேக்அப்துல்லாவின் உடல்நிலை மிகவும் மோசமடைந்தது.

டாக்டர்களின் முயற்சிகள் அனைத்தும் பயனளிக்காமல் நேற்று இரவு 12 மணிக்கு அவரது உயிர் பிரிந்தது.

ஷேக் அப்துல்லாவின் மறைவுச் செய்தி கேட்டதும் காஷ்மீரே துயரத்தில் ஆழ்ந்தது.

### மக்கள் அஞ்சலி

மறைவுச் செய்தி அறிந்த காஷ்மீர் மக்கள் வெள்ளமெனத் திரண்டு கண்ணீர் மல்க அவரது வீட்டுக்குச் சென்று இறுதி அஞ்சலி செலுத்தினர்.

அவரது உடலைக் கண்டவுடன் மக்கள் கதறிக்கதறி அழுதனர். இறுதி அஞ்சலி செலுத்த மக்கள் நீண்ட கியூவில் நின்ற வண்ணம் உள்ளனர்.

பொது மக்கள் இறுதி மரியாதை செய்வதற்காக அவரது வீட்டுக்கு எதிரே உள்ள பெரிய மைதானத்தில் ஷேக்கின் உடல்

### மகன் முதல்வர் ஆனார்

77 வயதான ஷேக் அப்துல்லா மரணம் அடைந்ததும் அவரது மூத்த மகன் பரூக் அப்துல்லா காஷ்மீரத்தில் தற்காலிக முதல்வராகப் பதவி ஏற்றார்.

பதவி ஏற்றவுடனேயே காஷ்மீர் அமைச்சரவைக் கூட்டம் பரூக் அப்துல்லா தலைமையில் நடந்தது.

மறைந்த ஷேக் அப்துல்லாவுக்கு மனைவியும், 3மகன்களும் 2மகள்களும் உள்ளனர்.

மூத்தமகனை அவர் தனது வாரிசாக தயாரித்து இருந்தார். மூத்த மகன் பரூக் அப்துல்லா இப்போது தற்காலிக முதல்வராக ஆகியுள்ளார்.

இன்று காலை வைக்கப்பட்டது. நாளை காலை 7 மணி வரை மக்களின் இறுதி அஞ்சலிக்காக அங்கே வைக்கப்பட்டு இருக்கும்.

ஷேக் அப்துல்லாவின் உடல் வெள்ளியன்று காலை 11 மணிக்கு டால் ஏரிக்கரையில்நல்லடக்கம் செய்யப்படும்.

### 11 நாட்கள் துக்கம் அனுஷ்டிப்பு

ஷேக் அப்துல்லா மறைவை ஒட்டி காஷ்மீர் அரசு 11 நாள் துக்கம் கடைப்பிடிக்கும். காஷ்மீர் அரசு அலுவலகங்கள், பள்ளிகள் எல்லாம் மூன்று நாட்கள் விடுமுறை அறிவிக்கப்பட்டுள்ளது.

பெரியகுளம் இடைத்தேர்தல்

## எம். ஜி. ஆர். மன்றங்களின் சார்பில் பணியாற்றுவோர்

பெரியகுளம் இடைத்தேர்தலில் கழகவேட்பாளர் வெற்றிக்காக தேர்தல் பணிகள் ஆற்றுவதற்காக கழகம் அமைத்துள்ள தேர்தல் பணிக் குழுவினருடன் இணைந்து பணியாற்ற கிழ்க்குறிப்பிட்டுள்ள மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற தோழர்கள், அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத்தின் சார்பில் தொகுதி வாரியாக சென்று பணியாற்றுவார்கள்.

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் திரு முசிறிப்புத்தன் அவர்கள் தலைமையில் தேர்தல் பணியாற்றும குழு -

1. ஆண்டிப்பட்டி:- திரு. இ. பாலுச்சாமி, எம். எல். ஏ, திண்டுக்கல் திரு. சிவநாத்பாபு, மதுரை திரு. கே. எஸ். இராஜேந்திரன்
2. வடுகப்பட்டி:- கோவை திரு. கா. மருதாச்சலம், போரூர் திரு. சண்முகசுந்தரம், கோவை திரு. தா. மலரவன்
3. சேடப்பட்டி ஒன்றியம்:- புலவர் திரு. பொன்னம்பலம், உசிலம்பட்டி திரு. அன்புமாயன், திருச்சி திரு. தேவதாஸ் எம். சி.,
4. கல்லுப்பட்டி ஒன்றியம்:— திரு. காட்டு ஜெயபால், திரு. கரூர் பாலகிருஷ்ணன், திரு. குமார் தமிழ்மகன் உசேன்.

பெரியகுளம் ஒன்றியம்:— திரு. எஸ். வி. வரதராஜன் சேலம் திரு.எம்.எப். ரகிமான், ராசிபுரம் திரு. துரை.

6. பெரியகுளம் நகரம்:— திரு. கேசவஆதித்தன் எம். எல். ஏ., திரு.பாளை எஸ்.நாராயணன். திரு. பாளை. ராஜசெல்வம், தூத்துக்குடி திரு. பாலகிருஷ்ணன், சாத்தூர் திரு. உசேன்.

கொடைக்கானல்:- தருமபுரி திரு. எச். ஜி. ஆறுமுகம், அநூர் திரு. செல்வராஜ்.

அனைத்துலக எம் ஜி ஆர் மன்றப் பொதுச்செயலாளர் திரு ஆர் சௌந்தரராசன் அவர்கள் தலைமையில் தேர்தல் பணியாற்றும் குழு:-

1. கம்பம் ஒன்றியம்:- வேலூர் திரு. ஏ. கே. அரங்கநாதன்., ஆம்பூர் திரு. குலசேகரப் பாண்டியன், எம்.எல்.ஏ., திரு.தி. அன்பழகன், எம்.எல்.ஏ.,
2. கம்பம் நகரம்:- திரு. லியாகத்அலிகான், எம். ஏ. பி. எல்., திரு. பொள்ளாச்சி. ஜெயராமன், இடைப்பாடி திரு. கணேசன், எம்.எல்.ஏ.,
3. உத்தமபாளையம்:- திரு. காஞ்சி பாலாஜி, திரு. சீர்காழி பாலசுப்ரமணியம் எம். எல். ஏ., திரு. காஞ்சி பன்னீர்செல்வம்.
4. போடி ஒன்றியம்:- மதுரை திரு. நவநீத கிருஷ்ணன், எம். சி., திரு. மதுரை இளவரசன், எம். சி., திருச்சி திரு. அன்புதாசன்.
5. போடி நகரம்: திரு. போடி. ராமதாஸ், திரு. தாமரைக்கனி, எம். எல். ஏ.
6. தேனி ஒன்றியம்:- கடலூர் திரு. ஜனார்த்தனன், பி. எஸ்சி., சிதம்பரம் திரு. முத்து கோவிந்தராசன், திரு. ஈரோடு. அழகரசன், ஈரோடு திரு. விஸ்கோ சண்முகம்
7. தேனி நகரம்:- திரு. சமரசம் எம். எல். ஏ., சென்னை திரு. ஐசரிவேலன், சென்னை திரு. இ. மதுசூதனன், திரு. சையத்கான்
8. சின்னமனூர் நகரம்:- திரு. அய்யம்பேட்டை அஜீஸ், திரு. வி. ஆர். கே. பழனியப்பன், சேலம் நாராயணன்.
9. சின்னமனூர் ஒன்றியம்:- திரு. விஜயபாலன் எம். எல். ஏ., திரு. பட்டுக்கோட்டை பாப்பையன். திரு. திருவாரூர் அப்துல்லா.

தேர்தல் பணிகளுக்காக அறிவிக்கப்பட்டுள்ள எம்.ஜி.ஆர். மன்றத் தோழர்கள், குறிப்பிட்ட தொகுதிகளுக்குச் சென்று, கழகத் தேர்தல் அலுவலகத்தில் தொடர்பு கொண்டு தேர்தல் பணிகளை சிறப்பாக செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

ஆர். சௌந்தரராசன் — பொதுச்செயலாளர்

பி. முசிறிப்புத்தன் — தலைவர்

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம்